# THE MADRAS JUNIOR



ஏப்ரல் 1955



**HENRI DUNANT — Founder of The Red Cross.**
International Red Cross day will be celebrated throughout the world on the 8th May to commemorate his Birth Day Anniversary.

## Activities of Juniors of St. Philamena's Higher Elementary School, Mattupatti, Begumbur, Madurai.



*Indian sweets prepared by the Junior are seen being sold to the School Children.*



*Juniors Feeding the Poor Children during Red Cross Week.*

*Juniors Presenting the Zinc Pots, purchased from the Group Fund, to the School for the use of School-Garden.*





## பத்திராதிபர் குறிப்பு

அன்பார்ந்த ஜூனியர்களே,

ஏப்பிரல் மாத மதரூஸ் ஜூனியர் பிரதி உங்களுக்குக் கிடைக்கும்பொழுது, உங்களில் சிலர் கோடை கால விடுமுறையில் குதூகலத்துடன் காலத்தைக் கழித்துக்கொண்டிருப்பார்கள். சிலர் விடுமுறை நாட்கள் எப்பொழுது வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். விடுமுறை முடிவதற்குள் நீங்கள் ஜூனியர் பிரதியைப் படிப்பதற்கு அதிக அவகாசம் இருக்கும் என்று நான் நம்புகிறேன்.

விடுமுறை நாட்களில் நீங்கள் இன்னும் ஜூனியர்கள் என்பதை மறக்கக் கூடாது. அடுத்த பள்ளிக்கூட ஆண்டில் உங்களுடைய ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதியைப் பற்றியும், அதன் திட்டங்களைப் பற்றியும் நினைப்பதற்கு விடுமுறை நாட்களே சிறந்த காலமாகும். பள்ளிக்கூடம் திறந்தவுடன் உங்கள் கமிட்டியில் நீங்கள் வகுத்த திட்டங்களை ஆலோசனை செய்ய வேண்டும்.

திட்டங்களை வகுப்பதுடன் மட்டுமன்றி, சில காரியங்களையும் நீங்கள் **செய்யக் கூடும்.** உங்களைப் போன்ற சிறுவர் சிறுமியர்களுடன் தினந்தோறும் நீங்கள் கட்டாயமாகப் பழகியும், விளையாடியும் வருவீர்கள். அவர்களில் சிலர் ஏற்கெனவே சங்கத்தில் சேர்ந்த ஜூனியர்களாகவும், வேறு சிலர் ஜூனியர்கள் அல்லாதவர்களாகவும் இருப்பார்கள். உங்களில் சங்க ஜூனியர்களாக இருக்கிறவர்கள், ஜூனியர் ரெட்கிராஸ் என்ன என்பதைப் பற்றியும், அது என்ன செய்கிறது என்பதைப் பற்றியும் மற்ற சிறுவர் சிறுமியர்களுக்குச் சொல்லிக் காட்ட வேண்டும்; அவர்களுடன் சங்கத்தைப் பற்றிய பேச்சுகளையும், வார்த்தைகளையுமே பேசிக்கொண்டும், நினைத்துக் கொண்டும் இருக்கவேண்டும். பல சிறுவர்களும் சிறுமிகளும் சில முறைகளை வகுத்து, நடிக்க விரும்புகிறார்கள். நீங்கள் சுகாதாரத்தைப் பற்றி ஏன் நாடகமாக நடிக்கக் கூடாது? அல்லது ரெட்கிராஸ் எவ்வாறு ஆரம்பமாயிற்று என்பதைப் பற்றி நாடகம் தயாரிக்கலாம். மே மாதம் 8-ஆந்தேதியன்று ரெட்கிராஸின் ஸ்தாபகரான ஹென்றி டியூனன்ட்டு (Henry Dunant) என்பவரின் பிறந்த நாளன்று மேலே சொல்லிய பிரகாரம் செய்வது மிகவும் பொருத்தமானது. (அட்டையின்மேல் உள்ள படத்தையும், 2-ஆம் பக்கத்திலுள்ள போதனைகளையும் கவனிக்கவும்.)

**மதரூஸ் ஜூனியர் சஞ்சிகையில்** விடுமுறை நாட்களில் நீங்கள் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றி வெளியிட விரும்புகிறேன். ஆகையினால், உங்கள் கமிட்டியில் ஆலோசிக்கப் போகும் அடுத்த ஆண்டுத் திட்டங்களை அனுப்புங்கள். அத்திட்டங்கள் மற்றத் தொகுதிகள் விரும்புகிறதாகவும், பயன்தரக் கூடிய காரியங்களுக்கு உதவுகிறதாகவும் இருக்க வேண்டும்.

தலைமைக் காரியாலயம், ராஜ்யப் பிராஞ்சுப் போட்டிகளின் முடிவுகளைப் பற்றியும், அப்போட்டிகளில் தேர்ச்சியுற்ற தொகுதிகளுக்கு எனது நன்றியைத் தெரிவிப்பதைப் பற்றியும் இப்பிரதியில் வெளியிடுகிறேன். அதிக எண்ணிக்கையுள்ள நமூனாக்களை (Entries) அனுப்புவதற்கும், அவர்களைப் பின்பற்றி மற்றத் தொகுதிகள் எதிர்காலப் போட்டிகளில் கலந்துகொண்டு அதிக நமூனாக்களை அனுப்புவதற்கும் அவர்களுடைய வெற்றியே அவர்களுக்கு மேன்மேலும் ஊக்கம் அளிக்கும் என்று நான் விரும்புகிறேன். இது சம்பந்தமாய் நான் உங்களுக்குச் சில செய்திகளைச் சொல்லுகிறேன் :—

நமது ராஜ்யத்தில் உள்ள **பெரும்பான்மையான** சங்கத் தொகுதிகள் மேலே சொல்லிய போட்டிகளில் கலந்துகொண்டு வெற்றியடைய முயற்சி செய்வதில்லை. ஆனால் மற்ற ராஜ்யங்களிலுள்ள சங்கத் தொகுதிகள், தலைமைக் காரியாலயத்தினால் நடத்தப்படும் போட்டிகளில் கலந்துகொள்வதற்கு வெகு முயற்சியுடையவர்களாய்ப் பரிசுகள் பெறுவதன் பொருட்டு நமூனாக்களை அனுப்புகிறார்கள். அப்பரிசுகளைத் தொகுதிகளின் நன்மைக்காகவே அவர்கள் பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள்.

வெகு ஊக்கத்துடனும், உண்மையாகவும் தங்களுடைய வேலைகளைத் தொடங்குகிறவர்கள், இறுதியில் வெற்றியடைவார்கள் என்பதில் சிறிதளவும் சந்தேகமில்லை என்பது என்னுடைய முழு நம்பிக்கையாகும். இறுதியாக, உங்களில் ஒவ்வொருவரும் விடுமுறையைச் சந்தோஷமாய்க் கழிக்கவும், வருங்கால ஆண்டில் எல்லாப் போட்டிகளிலும் வெற்றியடையுமாறும் நான் மனமார விரும்புகிறேன்.

இப்படிக்கு,
உங்கள் சேவையில் ஈடுபட்டுள்ள
T. P. சந்தானகிருஷ்ண நாயுடு அவர்கள்,
கௌரவ டைரெக்டர்,
ஜூனியர் ரெட்கிராஸ்,
சென்னை ராஜ்யம்.

## ரெஜிஸ்திரேஷன் கட்டணங்கள் செலுத்துவதற்காகச் சங்கத் தொகுதிகளுக்கு ஞாபகப்படுத்துதல்

*1954*-ஆம் ஆண்டில் பதிவு செய்துகொண்டுள்ள ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிகளில் பல *1955*-ஆம் ஆண்டிற்கு இன்றுவரையில் பதிவு செய்யாமல் இருக்கின்றன. ஆகையினால், அவைகளுடைய ரெஜிஸ்திரேஷன் கட்டணங்களை ஜூலை மாதச் சஞ்சிகை வெளிவருவதற்குமுன் அவைகள் செலுத்திவிட வேண்டும் என்று வேண்டிக்கொள்ளப்படுகின்றன. ரெஜிஸ்திரேஷன் கட்டணம் செலுத்தாதவைகளுக்குச் செலுத்தும்வரையில் ஜூலை மாதச் சஞ்சிகை நிறுத்தப்பட நேரிடும்.

---

## அறிவிப்பு (Announcement)

### 1955-ஆம் ஆண்டு மே மாதம் 8-ஆந்தேதியன்று ஹென்றி டியூனன்ட்டின் (Henry Dunant) பிறந்த நாள் விழாக் கொண்டாட்டம்

நமது சங்க ஸ்தாபகரான ஹென்றி டியூனன்ட்டின் பிறந்த ஆண்டுத் திருநாளைக் குறிப்பிடுவதன்பொருட்டு முன் போலவே, இவ்வாண்டும் மே மாதம் *8*-ஆந் தேதியன்று சர்வ தேச ரெட்கிராஸ் திருநாள் (International Red Cross Day) உலகம் எங்கும் கொண்டாடப்படும். இந்தியாவிலுங்கூட, எங்கெங்கு ரெட்கிராஸ் வேலைகள் நடந்தேறி வருகின்றனவோ, அங்கெல்லாம் இத்திருநாள் கொண்டாடப்படும். நம் ராஜ்யத்திலுள்ள சங்கத்தொகுதிகளுங்கூட, முன் ஆண்டில் இருந்ததைவிட, இவ்வாண்டில் மிகவும் ஊக்கத்துடன் திருநாளைப் பூரண வெற்றியுடன் கொண்டாட வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இது சம்பந்தமாக, சுற்றறிக்கை (Circular) ஒன்று ஜில்லாக்களிலுள்ள ரெட்கிராஸ் பிராஞ்சுகளுக்கும், ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளுக்கும் வெகு விரைவில் அனுப்பப்படும். சங்கத் தொகுதியின் அங்கத்தினர்களில் சிலர், சந்தோஷமாய் வீடுகளில் அவர்களுடைய விடுமுறைகளைக் கழிப்பார்கள் என்பதை நாங்கள் அறிவோம். அவ்வாறு இருந்தாலுங்கூட, அவர்கள் சமீபத்திலுள்ள ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சுக் காரியதரிசிகளுடன் தொடர்பு வைத்துக் கொண்டு, அவர்களாலான சேவைகளைச் செய்து, திருநாளைக் கொண்டாடுதல் வேண்டும். ரெட்கிராஸ் பிராஞ்சுக் காரியதரிசிகளுக்கு விழாவின் நிகழ்ச்சிக் குறிப்புகள் அறிவிக்கப்படும். எத்தனை ஜூனியர்கள் விழாவில் கலந்துகொண்டு, வெற்றியுறச் செய்வார்கள் என்பதை நாம் கவனிப்போமாக.

---

## விசேஷச் செய்தி

*(நமது ஜூனியர்கள் அறிந்துகொள்ளும்பொருட்டு ஆஸ்திரேலிய ஜூனியர்களினால் எழுதப்பட்ட வாழ்த்துக் கடிதத்தின் நகல் கீழே பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.)*

காலன்ஸ்வேல் (Collensvale)
தாஸ்மானியா (Tasmania)
*30-6-54.*

அன்புள்ள இந்திய நண்பர்களே!

உங்களுக்குக் கடிதம் எழுதுவதற்காக நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம். எங்களுடைய பெயர்களையும், வயதையும் கீழே கொடுத்துள்ளோம்:—

மாரீன் ஹட்சின்ஸன் (Maureen Hutchinson)—வயது *11*.

பெட்டி நெல்ஸன் (Betty Nelson)—வயது *12*.

பாயி பிரீஸ் (Faye Bryce)—வயது *13*.

நடனம் ஆடுதல், கடிதங்கள் எழுதுதல், பின்னுதல், பாடுதல், வழுக்கி ஓடப் பழகுதல் (Skating), படித்தல் முதலியவைகள் மாரீன்னினுடைய மனதிற்கு இனிய பொழுதுபோக்குச் செயல்களாகும். பின்னுதலைத் தவிர்த்து, மற்றவைகள் எல்லாம் மாரீன்னினுடையவைகளைப் போன்ற செயல்கள்பாயி பிரீஸின் பொழுதுபோக்குச்செயல்களாகும். பின்னுதல்

நடனம் ஆடுதல், தபால் முத்திரை சேகரித்தல், கடிதம் சேகரித்தல், இன்னும் இது போன்ற பிற செயல்கள் பெட்டி நெல்ஸனின் மனதிற்கு இனிய பொழுதுபோக்குச் செயல்களாகும். பாயி பீரீஸும், மாரீன் ஹட்சின்ஸனும் பொத்தான்களையும் சேகரிக்கின்றார்கள்.

காலன்ஸ்வேல், மலைகளாலும், குன்றுகளாலும் சூழப்பட்டது பள்ளத்தாக்கும் பார்ப்பதற்கு மிகவும் இரம்மியமாய் இருக்கின்றது. பெர்ரி, ஆப்பிள் முதலிய பழங்களை நாங்கள் பயிர் செய்கிறோம். ஒரே வயதுள்ள எங்களில் ஒவ்வொருவருக்கும் மனதிற்கு இனிய பொழுதுபோக்குச் செயல்களுடன்கூட எழுதும் பழக்கத்தையும் மேற்கொள்ள நாங்கள் விரும்புகிறோம். இந்தப் பள்ளிக்கூடத்தில் 90 குழந்தைகள் இருக்கின்றார்கள். எங்களுடைய வரிசை 1 (A)யிலிருந்து ஆறு வரையில் இருக்கிறது. எங்களுக்கு மூன்று உபாத்தியாயர்கள் இருக்கிறார்கள். தபால் ஆபீஸிலிருந்து தாஸ்மானியாவின் தலைநகரமான ஹோபார்ட்டு (Hobart) வரையில் 12 மைல் விஸ்தீரணமுள்ள பள்ளத்தாக்கு இருக்கிறது. தற்சமயம் குளிர்காலம் ஆதலால், பனி பெய்துகொண்டேயிருக்கின்றது. எங்களுடைய பள்ளிக்கூடத்தில் ரெட்கிராஸ் இருக்கின்றது. குருடு, செவிடு முதலியவர்களுக்கு நாங்கள் உதவி செய்கின்றோம்; அதுவுமன்றி, உறுப்பற்றவர்களுக்குங்கூட, அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தும், எத்தனை நன்கொடைகள் வழங்க முடியுமோ, அத்தனை நன்கொடைகள் வழங்கியும் ரெட்கிராஸை ஆதரிக்கின்றோம். பிறநாட்டிலுள்ள எங்களையொத்த ஜூனியர்களுக்கு எழுதுவதற்கு நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்; அவர்களுடைய பதிலையும் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

உங்களுடைய உண்மையான,

மாரீன் ஹட்சின்ஸன்
பெட்டி நெல்ஸன்
பாயி பீரீஸ்

திரு. D. பேஜ் (Page), சங்கத் தலைவர்
மாரீன் ஹட்சின்ஸன், காரியதரிசி

---

## சர்வ தேசக் கமிட்டியின் தலைவரிடமிருந்து பெற்ற புதிய ஆண்டின் விசேஷச் செய்தி

[ரெட்கிராஸ் சங்கங்களின் கூட்டுக் கட்சியிலிருந்து (League of Red Cross Societies) இரண்டு விசேஷச் செய்திகள் வரப்பெற்றோம். அவைகளில் ஒன்று 1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதச் சஞ்சிகையுடனேயே அச்சடித்து, நமது ஜூனியர்கள் எல்லோருக்கும் அனுப்பப்பட்டது. இரண்டாவது விசேஷச் செய்தி நமது மதராஸ் ஜூனியர்கள் அறிந்துகொள்ளும்பொருட்டுக் கீழே பிரசுரித்துள்ளோம்.—பத்திராதிபர், மதராஸ் ஜூனியர்]

சென்ற ஆண்டில் துன்பம் அடைந்தவர்களுக்கும், எளிய அனாதையற்ற மக்களுக்கும் ரெட்கிராஸ் எண்ணற்ற சந்தர்ப்பங்களில் உதவி செய்து இருக்கிறது. அதன் ஸ்தாபக சங்கம், ஜினீவாவிலுள்ள சர்வ தேசக் கமிட்டியார் சண்டை, கலகம், சச்சரவு முதலியவைகளில் பலியானவர்களுக்காக விருப்பத்துடன் ஊக்கமாக உழைப்பதையே தங்கள் கடமையாகவும், கட்டுப்பாடாகவும் கொண்டிருக்கின்றன. சர்வ தேச சங்கக் கமிட்டி தலையிட்டு, தன்னால் இயன்ற அளவு எளிதான காரியங்களைச் செய்வதற்கு அரசாங்கங்கள் உத்தரவு கொடுத்து, அதன் காருணிய வேலைகளை ஆதரித்தால், கமிட்டியிடமிருந்து எதிர்பார்க்கும் சேவைகளையெல்லாம், அது மேன்மேலும் உலகிற்குச் செய்துகொண்டேயிருக்கும். ஆகையினால், வருகிற புது ஆண்டிற்கு ரெட்கிராஸின் வேலைகள் முன்னிருந்ததைவிட அனைவரும் அறிந்துகொள்ளும்படியாகவும், மிகவும் பொருத்தமானதாகவும் இருக்கும். அவ்வேலையானது விலைமதிக்கவொண்ணாத ஆஸ்தியாகும். உலக மக்கள் தங்கள் பாதுகாப்பிற்காகவும், நிலைபெற்று வாழ்வதற்காகவும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அவ்வாஸ்தியினைப் பாதுகாத்தல் வேண்டும்.

M. பால் ரீயூஜர் (M. Paul Ruegger),
சங்கத் தலைவர்
ரெட்கிராஸ் சர்வ தேசக் கமிட்டி.

---

## 1954-ஆம் ஆண்டில் நடந்த போட்டி முடிவுகள்

**சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் போட்டிகள்**

ராஜ்யத்தில் 2,300-க்கு மேல் ரெஜிஸ்தர் செய்யப்பட்டுள்ள சங்கத் தொகுதிகளின் 5 நமூனக்களை மாத்திரமே வரப்பெற்றோம். இப்போட்டிகளில் சங்கத் தொகுதிகள் சரியாகக் கலந்துகொள்ளவில்லை என்பது 1954-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 16-ஆந்தேதியன்று கூடின சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டியின் கருத்து. நமூனக்கள் எதிர்பார்த்த அளவு வராவிட்டாலும், நமூனக்கள் அனுப்பிய தொகுதிகளின் முயற்சிகளைக் கெடுக்க அது விரும்ப

வில்லை. ஆகையினால், தொகுதிகளின் நமூனுக்களைப் பரிசீலனை செய்த பின்பு, அவைகளுக்குப் பரிசு கொடுப்பதற்குத் தீர்மானித்திருப்பதாக அறிவித்திருக்கிறது.

**போட்டி நெ. 2—முதல் உதவிக்கும் ஹோம் நர்ஸிங்க்கும் லேடி நை பரிசு**

திருவாரூரிலுள்ள (கிழக்குத் தஞ்சாவூர் ஜில்லா) போர்டு உயர்தரப் பாடசாலையிலிருந்து பெறப்பெற்ற ஒரே நமூனாவிற்கு முதற்பரிசான ரூ. 40/- அளிக்கப்பட்டது.

**போட்டி நெ. 3.—கவுன்சிலர்களுக்காக ஏற்படுத்திய வியாசங்கள்.**

இரண்டு நமூனுக்கள் மாத்திரம் வரப்பெற்றோம். அவைகள் இரண்டும் பரிசு பெறத் தகுந்தவைகளாகக் கருதப்படவில்லை.

**போட்டி நெ. 3—சங்கத் தொகுதிகளின் கைவேலை**

இரண்டு சங்கத் தொகுதிகள் மாத்திரம் அவைகளினுடைய நமூனுக்களை அனுப்பி வைத்தன. அவைகளில் ஒன்றேனும் பரிசு தரத் தகுந்ததாய்க் கருதப்படவில்லை அவ்வாறிருந்தாலும், ஹென்றி டியூனன்ட்டின் (Henry Dunant) சித்திரப் படம் பதிந்து கொடுத்த தென்னாற்காடு ஜில்லா, திருக்கோயிலூர் தாலூக்கா, எலவனசூர் (Elavanasur) P. O. திருப்பாயூர்-தாக்கா (Thiruppayur-Thakka) என்னும் ஊரில் உள்ள போர்டு ஆரம்பப் பாடசாலைக்கு மாத்திரம் விசேஷமானப் பரிசு கொடுப்பதாகக் கமிட்டி நிச்சயித்துள்ளது.

---

## அகில இந்திய ரெட் கிராஸ் சர்வதேசப் பள்ளிக்கூடக் கலைப் போட்டி

1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதச் சஞ்சிகையில் ஏற்கெனவே பிரசுரித்த வண்ணம் ராஜ்யத்திலுள்ள 22 பள்ளிக்கூடங்கள் போட்டியில் கலந்துகொண்டு புது டெல்லியிலுள்ள தலைமைக் காரியாலயத்திற்கு 147 நமூனுக்களை அனுப்பின. இந்த நமூனுக்களிலிருந்து கீழே கொடுத்துள்ள பாடசாலைகளிலிருந்து வரப் பெற்ற நமூனுக்களைத் தலைமைக் காரியாலயம் தேர்ந்தெடுத்து, கீழே குறிப்பிட்டுள்ள பிரகாரம் பரிசுத் தொகையைக் கொடுப்பதாக விருப்பத்துடன் ஒப்புக்கொண்டது :—

1. போர்டு உயர்தரப் பாடசாலை, கொடவாசல், கிழக்குத் தஞ்சை ஜில்லா—ஒரு விசேஷப் பரிசு அல்லது ரூ. 5—0—0
2. கௌடி உயர்தரப் பாடசாலை, திருவள்ளூர், செங்கற்பட்டு ஜில்லா—கௌரவமாகக் குறிப்பிடுதல்.

---

## கனடா நாட்டில் ஒண்டாரியோ என்னும் ஊரில் நடைபெற்ற சர்வதேச ஜூனியர் ரெட்கிராஸ் கண்காட்சிச் சாலை

ராஜ்யத்திலுள்ள எல்லா ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிகளுக்கும் மேலே குறிப்பிட்ட கண்காட்சிச் சாலையில் வைப்பதற்குரிய பொருள்களை அனுப்புமாறு பிரசுரிக்கப்பட்ட எங்கள் வேண்டுகோள்களுக்கு இணங்கி, மூன்று பாடசாலைகள் மாத்திரம் போட்டியில் கலந்துகொண்டு, 19 காட்சிப் பொருள்களை அனுப்பி வைத்தன. இவைகள் ஏற்கெனவே புது டெல்லியிலுள்ள தலைமைக் காரியாலயத்திற்கு அனுப்பப்பட்டன.

---

### தனிப்பட்ட ஆந்திர ராஜ்யத்தில் நடத்தப்பட்ட முதல் ஜூனியர் ரெட் கிராஸ் கவுன்சிலர்களின் பயிற்சிப் பகுதி

அனந்தபூர் ஜில்லாவில் கலியாண துர்க்கம் (Kalyanadrug) என்னும் ஊரில் உள்ள ரெட் கிராஸ் பிராஞ்சின் ஆதரவில் 1954-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 26-ஆம் தேதியன்று ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களின் பயிற்சிப் பகுதி ஏற்படுத்தப்பட்டது கலியாண துர்க்கத்திலுள்ள பாடசாலைத் தலைமை டெபுடி இன்ஸ்பெக்டர் திரு. G. இராமகிருஷ்ணய்யா அவர்களின் மேற்பார்வையில், நடத்தப்பட்டது. அப்பகுதியில் திருத்தப்பட்ட பாடத்திட்டங்களின்படி 6 நாட்கள் பயிற்சி நடத்தப்பட்டன. ரெவினியூ டிவிஷனல் ஆபிஸர் திரு. M. சத்திய நாராயணா அவர்களால் பயிற்சித் துவக்க விழா தொடங்கப்பட்டது. தாசில்தாரும், ரெட்கிராஸ் சப்-பிராஞ்சின் தலைவருமான திரு. K. தாமோதர ரெட்டி அவர்கள் துவக்க விழாப் பிரசங்கம் செய்தார். 60 உபாத்தியாயர்கள் பயிற்சிப் பகுதியில் தேர்ச்சி பெற்றார்கள்.

அனுபவ ஞானமும், கல்வியறிவுடையவர்களுமான பெருமக்கள் பயிற்சியாளர்களுக்குக் கல்வி போதித்தார்கள். 1954-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31-ஆந் தேதியன்று திரு. K. தாமோதர ரெட்டி அவர்கள் தலைமையில் திரு. டாக்டர் K. சுந்தரராவ் அவர்களால் வந்தனோபசாரப் பிரசங்கம் (Valedictory Address) செய்யப்பட்டது. பயிற்சிக் காலங்களில் பயிற்சியாளர்களால் தயாரிக்கப்பட்ட 120 படங்களும், 60 கைத்தொழிற்பொருள்களும் கண்காட்சிக்காக வைக்கப்பட்டன.

1955-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 2-ஆந் தேதியன்று அறிஞர் பலர் சேர்ந்து, பட்டமளிப்பு விழா கொண்டாடினார்கள். அவ்விழாவில் வெற்றியடைந்த பயிற்சியாளர்களுக்கு நற்சாட்சிப் பத்திரங்கள் வழங்கப்பட்டன. அப்பொழுது அனந்தப்பூர் ஜில்லாக் கல்வி ஆபீஸர் திரு. S. V. ரமணா அவர்கள் தலைமை வகித்தார்.

---

## நன்கொடைகள்

(1955-ஆம் ஆண்டு ஜனவரி மாத சஞ்சிகையின் தொடர்ச்சி)

| | | | |
|---|---|---|---|
| 1. | போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை, மங்களம் பேட்டை P. O. விருத்தாசலம், தென்னாற்காடு ஜில்லா | வெள்ள ரூ. அ. பை. நிவாரண நிதிக்காக | 1 0 0 |
| 2. | போர்டு முஸ்லிம் பாடசாலை, Kondayaruppu, Baskatbad | ,, | 3 2 0 |
| 3. | ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப்-கமிட்டியின் கன்வீனர் (வேலிப்பாளையம் நேஷனல் ஆரம்பப் பாடசாலை ஜூனியர் ரெட் கிராஸ் தொகுதியினரிடமிருந்து வசூலிக்கப்பட்ட நன்கொடை) | ,, | 4 4 0 |
| 4. | போர்டு ஆரம்பப்பாடசாலை, S. P. பட்டணம், திருவடானை (Tiruvadanai,) இராமநாதபுரம் ஜில்லா | ,, | 7 6 0 |
| 5. | செயிண்டு ஹெலன்ஸ் உயர்தர ஆரம்பப் பாடசாலை, பரங்கிமலை, சென்னை-16 | ,, | 5 0 0 |
| 6. | முனிசிபல் உயர்தர ஆரம்பப் பாடசாலை, கருந்தட்டான் குடி, தஞ்சாவூர் ஜில்லா | வெள்ள ரூ. அ. பை. நிவாரண நிதிக்காக. | 6 0 0 |
| 7. | ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களின் பயிற்சிப் பகுதியின் பயிற்சியாளர்கள், திருச்சிராப்பள்ளி | நோய், துன்பம் முதலியவைகளினால் பாதிக்கப்பட்டவர்களுக்காக | 25 0 0 |
| 8. | ஸென்ட்ரல் உயர்தர ஆரம்பப் பாடசாலை, காயல்பட்டினம், திருநெல்வேலி | ரெட்கிராஸ் வேலைக்காக | 7 0 0 |

கொடியேற்று நாளில் சென்னையிலுள்ள மாஜி வீரர்களின் சங்கத்திற்கு (Ex-Soldiers' Association) சென்னை, வண்ணாரப்பேட்டை விம்கோ ஆரம்பப் பாடசாலை நேரடியாக ரூ. 5—8—0 அனுப்பிற்று.

மேலே கூறிய நன்கொடைகள் அளித்தவர்களுக்கு எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அந்தத் தொகைகள் எக்காரணங்களுக்காக அனுப்பப்பட்டனவோ, அவற்றிற்காகவே அவைகள் பயன்படுத்தப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

—பத்திராதிப, "மெட்ராஸ் ஜூனியர்."

---

## 1954-ஆம் ஆண்டில் ஜில்லா ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளின் வேலையைப்பற்றி ராஜ்யப் பிராஞ்சின் அறிக்கை

### ஜில்லாக் கமிட்டிகளின் வேலை :

13 ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகள், 13 ஜில்லாக்களில் அக்கரையோடு வேலை செய்திருக்கின்றன என்பதை நாங்கள் பெருமகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்ளுகிறோம். இந்த இயக்கத்தின் முன்னேற்றத்திற்காக அநேகமாக எல்லாக் கமிட்டிகளும் சில பயனளிக்கக்கூடிய வேலைகளைச் செய்திருக்கின்றன. இவைகளில் முக்கியமாக, சென்ற ஆண்

டைக் காட்டிலும், சங்கத் தொகுதிகளின் எண்ணிக்கையை அதிகமாக்கிய கோயமுத்தூர், கிழக்குத் தஞ்சாவூர், மேற்குத் தஞ்சாவூர், தென் ஆற்காடு, தென் கனரா முதலியன குறிப்பிடத் தக்கவையாகும். செங்கல்பட்டு, திருச்சி, கூனூர் ஆகிய ஜில்லாக்களில் உள்ள ஜில்லா சப்-கமிட்டிகள் ரெஜிஸ்திரேஷன் எண்ணிக்கையை அதிகமாக்கியதுமட்டுமல்லாமல், கவுன்சிலர்களின் பயிற்சிப் பாடங்களை இரு முறை வெற்றிகரமாக நடத்தியிருப்பது பாராட்டுதற்குரியது. ஜில்லாக்களில் சங்கத் தொகுதியினரின் ரெஜிஸ்தர் நிலைமை பின் வருமாறு :—

செங்கற்பட்டு அதிகமான 642 சங்கத் தொகுதிகளைப் பராமரித்தது ; திருநெல்வேலி, ரெஜிஸ்தர் செய்ததில் குறைவாகயிருந்தாலும் 368 சங்கத் தொகுதிகளைப் பராமரித்து, சென்ற ஆண்டைப் போலவே இரண்டாவதாக இருக்கிறது. சென்னை நகரம் 276 சங்கத் தொகுதிகளைப் பராமரித்து மூன்றாவதாக இருக்கின்றது. கார்ப்பொரேஷன் பள்ளிக்கூடங்களில் 216 சங்கத் தொகுதிகளை ரெஜிஸ்தர் செய்திருக்கிற சென்னைக் கார்ப்பொரேஷன் கல்வி டிபார்ட்மெண்டே இதற்கு முக்கியக் காரணம். மற்ற ஜில்லாக்களுடைய கமிட்டிகளின் வேலைகளுங்கூடத் திருப்திகரமாகவே இருக்கிறது. அவை ஜில்லாக்களில் ஜூனியர் ரெட்கிராஸ் வேலைகளின் அபிவிருத்திக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்து வருகின்றன. சப்-கமிட்டிகள் அவைகளுடைய வேலைகளைத் தொடர்ந்து செம்மையாகச் செய்யும் என்றும், வருகிற ஆண்டில் சங்கத் தொகுதிகளின் எண்ணிக்கையை அதிகரிக்கச் செய்யும் என்றும் நம்பப்படுகிறது.

## சங்கத் தொகுதிகளின் எண்ணிக்கை :

நமது ராஜ்யத்தில் 1954-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31-ஆந்தேதி முடிய ரெஜிஸ்தர் செய்யப்பட்ட 2319 சங்கத் தொகுதிகள் இருந்தன ; ஆனால், 1953-ஆம் ஆண்டு 2473 இருந்தன. ஆந்திர ராஜ்யம் பிரிந்ததனாலும், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் ரெஜிஸ்த்ரேஷன் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்ததனாலுமே மேலே சொல்லிய குறைவு ஏற்பட்டது. நமது ராஜ்யத்தை எடுத்துக்கொண்டால், 25,000 பாடசாலைகள் இருந்தபோதிலும், பாடசாலைகளில் ரெஜிஸ்தர் செய்யப்பட்ட சங்கத் தொகுதிகள் மிகவும் குறைவென்றே கருத வேண்டும். இவ்வாண்டு முடிவதற்குள் குறைந்தது 10,000மாகிலும் ரெஜிஸ்தர் செய்ய வேண்டும். இது ஒன்றும் அடைதற்கு முடியாத காரியம் அல்ல. ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சுகளும், ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளும் சங்கத் தொகுதிகளின் கவுன்சிலர்களுடன் மிகவும் ஊக்கத்துடன் ஒத்துழைத்து வேலை செய்வார்களேயானால், இக்காரியத்தில் வெற்றி பெறுவோம்.

---

## அக்கிராசனர் மாற்றம் - ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டி, சென்னை ராஜ்யம்—அங்கத்தினர்கள் தெரிந்துகொள்வதற்கான அறிவுப்புகள்

1954-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வரையில் சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டியின் அக்கிராசனராயிருந்த திரு. S. கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள், கல்வி இலாக்கா டைரெக்டர் பதவியை விட்டுவிட்டு, திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேசுவர சர்வ கலாசாலைக்கு உப-சர்வ கலாதிகாரியாகப் (Vice-Chancellor) பதவியை ஏற்றுக்கொண்டார். அவருக்குப் பதிலாக நியமிக்கப்பட்ட கல்வி இலாக்கா டைரெக்டரான திரு N. D. சுந்தரவடிவேலு அவர்கள் கமிட்டியின் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். கமிட்டியின் முன் அக்கிராசனராயிருந்த திரு. S. கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள் நீண்ட காலம் சந்தோஷமாக வாழவும், புதிய உத்தியோகத்தில் அவருக்கு மேன்மேலும் நன்மைகள் பல உண்டாகவும் வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். நமது மத்தியில் நமது புது அக்கிராசனரை வரவேற்பதில் நாம் மிகவும் பெருமை அடைகிறோம். அன்னவரது விலை மதிக்க வொண்ணாத உதவியும், வழிகாட்டுதலுமே நமது சேவைகளுக்கு மிகுந்த ஆதரவும், பலமும் தரும் என்பதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை.

---

## அறிக்கை

### சங்கத் தொகுதிகளின் ரெஜிஸ்திரேஷன்—அறிவிப்பு

தலைமையாசிரியர்களுக்கும், சங்கத் தொகுதியின் கவுன்சிலர்களுக்கும் பல முறை ஞாபகப்படுத்தியுங்கூட, வேண்டுகிற விஷயங்களைக் குறிக்காமலேயே அவர்கள் அனுப்பும் ரெஜிஸ்திரேஷன் கட்டணங்களை இன்னும் பெற்றுக்கொண்டே வருகிறோம். ஆகையினால், இவ்விஷயத்தில் அவர்களுக்கு மறுபடியும் ஞாபகப்படுத்த வேண்டுவது அவசியமாகிறது.

நாங்கள் விரும்பும் விஷயங்களை உங்களுக்கு மறுபடியும் கீழே கொடுக்கிறோம் :—

| | |
|---|---|
| பாடசாலையின் பெயர்<br>விலாசம்<br>தபால் ஆபீஸ் பெயர்<br>தாலூக்கா<br>ஜில்லா | பெரிய எழுத்துக்களில் இருக்க வேண்டும். |
| ஜூனியர் அங்கத்தினர்களின் எண்ணிக்கை | சிறுவர்கள்...<br>சிறுமிகள்... |
| பாடசாலையின் மொத்த பேர் | சிறுவர்கள்...<br>சிறுமிகள்... |

முன் ஆண்டின் ரெஜிஸ்திரேஷன் நெம்பர் :
கவுன்சிலரின் பெயர் :

(பயிற்சி பெற்ற கவுன்சிலராயிருந்தால், அவர்/அவளுடைய சர்டிபிகேட்டு நெம்பரைக் குறிக்க வேண்டும்.)

மேலே சொல்லிய குறிப்புகளைத் தராமல் இருப்பதனாலேயே ரெஜிஸ்திரேஷன் சர்டிபிகேட்டுகள் கொடுப்பதில் மிகவும் தாமதம் ஏற்படுகிறது. ஆகையினால், அனுப்பும் ரெஜிஸ்திரேஷன் மனுவிலாவது அல்லது ரெஜிஸ்திரேஷன் பணம் அனுப்பும் M. O. கூப்பனிலாவது மேலே கொடுத்துள்ளபடி எழுதியனுப்புமாறு அவர்கள் வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள்.

ஜில்லாக்களிலுள்ள கவுரவக் காரியதரிசிகள், ரெட்கிராஸ் பிராஞ்சின் கன்வினர்கள், ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகள் ஆகியவர்கள் ரெஜிஸ்திரேஷன் செய்வதற்குத் தங்கள் பெயர்களை அனுப்புவதற்கு முன்னால், மேலே கொடுத்துள்ள விஷயங்களைச் சங்கத் தொகுதிகளிடமிருந்து பெற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## சஞ்சிகையில் வெளியிடுவதற்கான அறிக்கைகள்—ரெஜிஸ்தர் செய்யப்பட்டுள்ள சங்கத் தொகுதிகளுக்கு அளிக்கப்பட்டுள்ள அறிவுப்புகள்

சஞ்சிகையில் வெளியிடுவதற்காகத் தம் வேலைகளைப் பற்றிய அறிக்கைகளை அனுப்பும் ரெஜிஸ்தர் செய்யப்பட்ட சங்கத் தொகுதிகள் அவ்வறிக்கையில் தங்களுடைய ரெஜிஸ்தர் எண்களைக் குறிப்பிட்டு அனுப்புவதில்லை. ரெஜிஸ்தர் செய்யப்பட்ட சங்கத் தொகுதிகளின் அறிக்கைகளையே நாங்கள் வெளியிடுவதால், அவைகள் ரெஜிஸ்தர் செய்யப்பட்டவைகளா இல்லையா என்று ஆராய்வது மிகவும் சிரமமாக இருக்கிறது. அறிக்கைகள் உண்மையில் சஞ்சிகையில் வெளியிடப்பட வேண்டுமானால், அறிக்கைகளை அனுப்பும் சங்கத் தொகுதிகள், அவைகளின் ரெஜிஸ்தர் எண்களை அவ்வறிக்கைகள்மீது குறித்தனுப்ப வேணடும். மேலும், சங்கத் தொகுதிகளின் பொது நன்மைக்காக இயக்கங்களை விளக்கும் தகுந்த கட்டுரைகளை அனுப்ப வேண்டும் என்று அவைகளுக்கு அறிவிக்கப்படுகின்றது. ஒளிப்பதிவுப் படங்கள் (Photographs) வரவேற்கப்படுகின்றன. ஆனால் அவைகள் கூட்டுப் படங்களாக (Group Photo) இல்லாமல், ஜூனியர் ரெட்கிராஸின் நோக்கங்களோடு சம்பந்தப்பட்ட காரியங்களை விளக்குவதாக இருக்க வேண்டும். உதாரணமாக, ஜூனியர்கள், தோட்ட வேலைகள் செய்தல் விளையாட்டுகள், சுற்றுப்புறங்களைச் சுத்தம் செய்கின்ற இயக்கங்கள், கிராம மக்களுக்கும் அல்லது கிராமக் குழந்தைகள் சுத்தமாக இருப்பதற்கும் உதவி செய்தல், ஆரோக்கியத்தைப் பற்றிய போஸ்டர்கள் அல்லது வர்ணச் சித்திரங்கள் வரைதல், பிரதிதின ஆரோக்கிய மேற்பார்வையைப் பற்றி ஆல்பம் தயாரித்தல், சிறிய குழந்தைகளுக்கு அம்மை குத்துதல் அல்லது வைசூரி பால் பொருத்துதல் (Inoculation) ஆகியவைகளுக்கு உதவி செய்தல் முதலியவைகளாகும்.

## நமது ஜில்லா ரெட்கிராஸ், சப்-பிராஞ்சுகள் அனைத்துக்கும் சுற்று விளம்பரம்

விவரிக்கப்படும் விஷயம் : **ரப்பர் பலூன்கள்.**

ரெட்கிராஸ் சின்னமும், 'ரெட்கிராஸிற்கு உதவி செய்' என்னும் வாக்கியமும் பொறிக்கப்பட்டுள்ள ரப்பர் பலூன்கள் 1954-ஆம் ஆண்டின் நிதி திரட்டும் இயக்கத்தின்பொழுது மிகுந்த பிரசித்தி அடைந்திருந்தன. இவ்வாண்டு இயக்கத்திற்கு அத்தகைய பலூன்களைத் தயாரிப்பதற்கு நாங்கள் ஏற்பாடு செய்திருக்கின்றோம். தேவைக்கு வேண்டியதற்கு மேலாக அதிக பலூன்களை வைத்திருக்க விரும்பாததனால், பலூன்கள் தயாரிப்பதற்கு உத்தரவு கொடுக்கும் முன் உங்கள் ஜில்லாவில் வேண்டப்படுபவைகளைப் பற்றி நாங்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறோம். ஆகையினால், 1955-ஆம் ஆண்டிற்காக உங்கள் தேவையின் மொத்த எண்ணிக்கையைத் தயை செய்து தெரிவிக்க வேண்டுகிறோம். பலூன்களின் விலை முன்னிருந்த விலையைப் போன்றே (1 குரோஸ் ரூ. 7—12—0) இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## வெகுமதிகள் வழங்கல்—இந்திய ஜூனியருக்கு UNESCO பிரயாண கிராண்டு (Travel Grant) வழங்கல்

இந்தியா, ஆஸ்திரேலியா, இந்தோனேஷியா, தாய்லாந்து ஆகிய வெவ்வேறு நாட்டு நான்கு வாலிபர்கள் சர்வ தேச சம்பந்த ரெட்கிராஸைப் படித்து அறிந்துகொள்வதற்காக *1954*-ஆம் ஆண்டு UNESCO பிரயாண கிராண்டு அளித்தது. இந்த கிராண்டைப் பெறுதற்குப் பஞ்சாப் ராஜ்யத்தைச் சேர்ந்த ஜூனியர் திரு. பிரேம் ஸஹானி (Prem Sahani) தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் மற்ற ஜூனியர்களுடன் 50 நாள் சுற்றுப் பிரயாணத்தில் துருக்கி, கிரீஸ், யூகோஸ்லேவியா, சுவிட்ஜர்லாந்து, பிரான்சு, இங்கிலாந்து, இதாலி ஆகிய மேற்கத்திய நாடுகளிலுள்ள இடங்களைப் பார்வையிட்டார். அவர் தமது பிரயாணத்தைப் பற்றி விரிவான அறிக்கையை எழுதியிருக்கின்றார். 'மதுரஸ் ஜூனியர்' சஞ்சிகையில் இடம் போதாமையினால், அவ்வறிக்கையைப் பிரசுரிக்க இயலவில்லை. எனினும், நமது வாசகர்கள் தெரிந்துகொள்வதற்காக யூகோஸ்லேவியாவில் தங்கியிருக்கும் பொழுது அவர் படித்தவைகளைப் பற்றிய அறிக்கையின் முக்கியப் பகுதியை மாத்திரம் பிரசுரிக்கிறோம். "உலக ரெட்கிராஸ" என்னும் சமாசாரச் சஞ்சிகையில் வெளியாகியிருக்கும் அறிக்கை கீழே கொடுக்கப்பட்டுள்ளது :—

"இது யூகோஸ்லேவியாவில் முதல் தேசிய ரெட்கிராஸ் காம்பாக (Camp) இருக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டியது. நாங்கள் கூடியுள்ள இந்தத் தீவிற்கு விசேஷப் பெயர் ஒன்றும் இல்லை. இது ஏறக்குறைய ஒரு நூற்றாண்டாக யாரும் குடியில்லாததாய் இருந்தது. ஜூனியர்கள்தான் முதல் குடிகள் ஆவார்கள். படிக்க வேண்டிய வரிசையான பகுதிகளில் முதல்-உதவிப் பயிற்சி, கைத்தொழில், நீந்துதல், விவாதம் செய்தல், பிரசங்கம் செய்தல் ஆகியவைகள் சிலவாகும். இவைகள் அனைத்தையும் நான் கற்றுக்கொள்வதில் மிகவும் ஊக்கமுள்ளவனாயிருந்தேன். பள்ளிக்கூடங்களில் தினமும் நிகழ்வனவற்றுள் சுகாதாரம் ஒன்றாகும். ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிச் சங்கங்கள் பல வேறு வாலிபச் சங்கங்களாகத் தோன்றின. ஒவ்வொரு மாணவரும் சோப்பு, சீப்பு, டவல், பிரஷ் முதலியவைகள் அடங்கிய 'சுகாதாரப்' பையை வைத்திருத்தல் வேண்டும். இப்பைகளை வைத்திராத சிறுவர் சிறுமிகளுக்கு இவைகளைக் கொடுப்பதற்கு ஜூனியர் ரெட்கிராஸ் ஏற்பாடு செய்திருக்கிறது. உபாத்தியாயர் பயிற்சிக் கல்லூரிகளில் முதல்-உதவியும், மற்ற ரெட்கிராஸ் பாடங்களும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. 12 வயதிற்குட்பட்ட ஜூனியருக்கு முதல்-உதவிப் பாடம் போதிக்கப்படுவதில்லை.

---

## ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களுக்குத் தகுதித்தாள் (Merit Certificate) வழங்கல்

சென்னைப் பரங்கிமலை, செயிண்டு ஹெலினு உயர்தர ஆரம்பப் பாடசாலையில் உள்ள J. நேசமணி அம்மையாருக்குத் தகுதித்தாள் வழங்க ஜூனியர் ரெட்கிராஸ் கமிட்டி ஒப்புக்கொண்டது. இந்தத் தாளைப் பெறுவதற்காக இவ்வம்மையார் மேலே சொல்லிய பள்ளிக்கூடத்தில் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளின் கவுன்சிலராக ஐந்து ஆண்டுகள் தொடர்ச்சியாகச் சேவை செய்து தேர்ச்சியடைந்தார்.

---

## ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளின் அறிக்கை

### கடலூர், தென்னூற்காடு ஜில்லா

*1955*-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் *20*-ஆந்தேதியன்று ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டி, ஜூனியர் ரெட்கிராஸ் நாளை அமோக வெற்றியுடன் கொண்டாடிற்று. இது சம்பந்தமாக ஜில்லாக் கலெக்டர் திரு. A. உத்தண்டராமன், I. A. S., அவர்கள் தலைமையின்கீழ் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. சேவா சங்கக் (Guild of Service) காரியதரிசியாரும், ஜில்லாவில் முக்கியத்துவம் வாய்ந்தவர்களும் அச்சமயத்தில் பிரசங்கம் செய்தார்கள். அக்கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் கீழ்க் கண்டவை சேர்க்கப்பட்டுள்ளன :—

*1954*-ஆம் ஆண்டில் ஜூனியர் ரெட்கிராஸ் வேலைகள்; *1955*-ஆம் ஆண்டிற்குச் சப்-கமிட்டிற்காக உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுத்தல்; ஜூனியர் ரெட்கிராஸின் எதிர்கால வேலையின் நிகழ்ச்சிக் குறிப்பு; கடலூர் செயிண்டு ஜோசப்பு செகண்டரி பாடசாலை ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதி அங்கத்தினர்களால் ரெட்கிராஸ் வேலைகளைச் செய்து காட்டுதல்.

## இராமநாதபுரம்

•கனடா ஜூனியர்கள் இந்தியக் குழந்தைகளின் உபயோகத்திற்காக ஆரோக்கியப் பொருள்களை நன்கொடையாக அனுப்பினர்கள். இப்பொருள்களைக் கொடுப்பதற்காக 1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ஆந்தேதியன்று, இராமநாதபுரம் ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டி ஒரு கூட்டம் கூட்டிற்று அச்சமயம் ரெவினியூ டிவிஷனல் ஆபீசர் திரு. K. S. வேங்கட சுப்பிரமணியம் அவர்கள் தலைமை வகித்தார். அவர் கூட்டத்தில் பரிசுகளின் நோக்கங்களைப் பற்றி விளக்கிப் பேசி, தகுதி வாய்ந்த ஐந்து பாடசாலைகளுக்கு அப்பரிசுகளை வழங்கினர்.

## நாகப்பட்டினம் (கிழக்குத்) தஞ்சை

ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டி 1955-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 5-ஆந்தேதியன்று திரு. T. மாதவ மேனன், I. A. S. அவர்களின் தலைமையில் விசேஷக் கூட்டம் ஒன்றை நடத்திற்று. கமிட்டியின் அக்கிராசனராகிய ஜில்லாக் கல்வி ஆபீசர் தலைவரை வரவேற்றார். மேலும், அவர் ஜில்லாவில் ஜூனியர் ரெட்கிராஸ் செய்த வேலைகளைப் பற்றிச் சுருக்கமாகப் பேசி, 1955-ஆம் ஆண்டில் தொகுதிகளின் எண்ணிக்கை அதிகரிக்க வேண்டுவதன் அவசியத்தை வற்புறுத்திக் கூறினர். தலைவர், தம் சொற்பொழிவில், ஜில்லாவிலுள்ள ரெட்கிராஸிற்குத் தாம் உதவி புரிவதாக உறுதி கூறினர்; கனடா ஜூனியர்கள் நன்கொடையாக அனுப்பிய மூன்று ஆரோக்கியப் பொருள்களை மூன்று தகுதி வாய்ந்த பாடசாலைகளுக்குப் பரிசுகளாக விநியோகம் செய்தார். சங்கத் தொகுதிகளின் அங்கத்தினர்களால் பல வேடிக்கைக் காட்சிகள் (Variety Entertainment) நடத்தப்பட்டன.

## தஞ்சாவூர், (மேற்குத்) தஞ்சை

கனடா ஜூனியர்களால் நன்கொடையாக வழங்கப்பட்ட ஆரோக்கியப் பொருள்களை ஏழைப் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு வழங்குவதற்காக 1955-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 19-ஆந்தேதியன்று, கிழக்குத் தஞ்சாவூர் ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டியினுல் ஒரு விசேஷக் கூட்டம் கூட்டப்பட்டது டெபுடி கலெக்டரும், ஜில்லா க்ஷேமாபிவிருத்தி ஆபீஸருமான திரு. டேனியல் சிரோன்மணி அவர்கள் (Daniel Sironmani) அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். பரிசுப் பொருள்களின் நோக்கங்களைப்பற்றி அங்கத்தினர்களுக்கும், பிறருக்கும் விளக்கிக் கூறின பின், ஜில்லாவிலுள்ள பல தகுதி வாய்ந்த பாடசாலைப் பிள்ளைகளுக்கு அவைகள் வழங்கப்பட்டன.

---

# சங்கத் தொகுதிகளைப் பற்றிய செய்திகள்

## தென்னாற்காடு

**ஆனந்தா பாடசாலை, வானியம்பாளையம், V. அகரம் போஸ்டு.**

சங்கத் தொகுதி முதல் உதவிப் பெட்டியை வைத்துக்கொண்டு, காயமடைந்தவர்களுக்குச் சிகிச்சை அளித்து வருகின்றது. சுற்றுப் பக்க கிராமங்களிலுள்ள மக்களுங்கூட முதல் உதவியினுல் பயனடைகின்றார்கள்.

**செயிண்டு ஜோசப்பு செகண்டரி பாடசாலை, கடலூர்.**

சங்கத் தொகுதியின் அலுவல்களின் 1954-55-ஆம் ஆண்டு அறிக்கை வரப் பெற்றோம். டிவிஷனல் பாடசாலைகளின் இன்ஸ்பெக்டர் திரு A. கோபால ஐயர் அவர்கள் தலைமையில் 1954-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 13-ஆந்தேதி சங்கத் தொகுதி துவக்க விழா நடத்தப்பட்டது. துவக்க விழாவில் காயம் அடைந்தவர்களுக்கு முதல் உதவி சிகிச்சை செய்து காண்பித்தல் முக்கிய பகுதியாய் இருந்தது 132 மாணவர்கள் சங்கத் தொகுதியில் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். சங்கத் தொகுதி ஜூனியர் ரெட்கிராஸ் அலுவல்களில் எல்லாவற்றிலும் கவனம் செலுத்தி வந்தது. அவைகளில் கீழே கொடுத்துள்ளவைகளைச் சிறப்பாகக் கூறலாம் :—

குடிமக்களுக்குச் சாலைகளில் அனுசரிக்க வேண்டிய முதல் பாதுகாப்பு விதிகளைப் போதித்தல்; கிராமச் சுத்தம் ; பொருளைப் பற்றி விவாதிக்கப் பயிற்சியளித்தல் ; கலைகாட்சிச் சாலைகளுக்கு ஆல்பங்கள் தயாரித்தலும், இன்னும் இதுபோன்ற மற்றக் காரியங்களும்.

## செங்கற்பட்டு

**கௌடி உயர்தரப் பாடசாலை, திருவள்ளூர்**

ஜூனியர் ரெட்கிராஸின் அலுவல்களைப் பற்றிய 1954-55-ஆம் ஆண்டு அறிக்கையைச் சங்கத் தொகுதியினிடமிருந்து வரப்பெற்றோம். சங்கப் பெயர் அட்டவணையில் 130 அங்கத்தினர்களின் பெயர்கள் இருக்கின்றன. சங்கத் தொகுதி இவ்வாண்டில் ஐந்து முறை கூடிற்று. சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் மருத்துவ சாலைகளிலும், தரும வைத்திய சாலைகளிலும் விஜயம் செய்து, அங்கு உள்ள ஏழை

நோயாளிகளுக்குப் புத்தகங்கள், சஞ்சிகைகள், பொம்மைகள் முதலியவைகளைக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிப்பித்தார்கள். அகில இந்திய ஜூனியர் ரெட்கிராஸ் சர்வதேசப் பள்ளிக்கூடக் கலைப் போட்டியில் சங்கத் தொகுதி கலந்துகொண்டு, அநேக நமூனாக்களுக்காகக் கௌரவப் பெயர் தேடிக் கொண்டது; அதுவுமல்லாமல் ராஜ்ய விவசாயக் கண்காட்சிக்கு (State Agricultural Exhibition) அனுப்பின சிறந்த நமூனாக்களுக்காகத் தகுதித் தாள் (Certificate of Merit) பெற்றது; இன்னும் ஒன்றும் பரிசாகப் பெற்றது. இச்சங்கத் தொகுதி பல விதச் சமூக க்ஷேமாபிவிருத்தி அலுவல்களிலும் இவ்வாண்டில் பங்கெடுத்துக்கொண்டது.

## கோயம்புத்தூர்

**போர்டு ஆரம்பப் பாடசாலை, கன்னிவடி போஸ்டு (Kannivadi P. O.) தாராபுரம் தாலூக்கா.**

இச்சங்கத் தொகுதி மாதாந்திரக் கூட்டத்தை ஒழுங்காக நடத்துகிறது. 1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 31-ஆந்தேதி நடந்த கூட்டத்தில் இரண்டு அங்கத்தினர்கள் 'அப்பியாசம்' என்னும் விஷயம் பற்றிப் படித்தார்கள்.

## சென்னை நகரம் :

**ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் ஆண்கள் ஆரம்பப் பாடசாலை, கிரிப்பித் ரோடு, தியாகராய நகர், சென்னை—17.**

1954-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25-ஆம் தேதியன்று சங்கத் தொகுதி 30 மைல் தூரத்திலுள்ள சிங்கப்பெருமாள் கோவில் என்னும் ஊருக்குப் பாடசாலையின் ஆசிரியர்களுடன் உல்லாசப் பிரயாணமாகச் சென்றது; அவ்வூரிலுள்ள கோவிலைப் பார்த்து முடிந்ததும், கிராம மக்களின் பொருட்டு ஒரு பொதுக் கூட்டம் கூட்டிற்று. அக்கூட்டத்திற்குச் செங்கற்பட்டு ஜில்லா போர்டு பிரசிடெண்டு திரு. R. கோவிந்தராஜலு நாயுடு அவர்கள் தலைமை வகித்தார். பாடசாலை ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதியின் முக்கியத்துவத்தைப் பற்றிச் சங்கக் கவுன்சிலர் கூட்டத்தில் பேசினார். அங்கத்தினர்கள் பலவித வேடிக்கைக் காட்சிகளைக் காட்டினார்கள். கூட்டத்திற்கு வந்திருந்த கிராம மக்களால் அவைகள் பெரிதும் பாராட்டப்பட்டன.

## மதுரை

**செயிண்டு பிலாமினு உயர்தர ஆரம்பப் பாடசாலை மேட்டுப்பட்டு, பீகம்பூர் போஸ்டு, (Begumbur P.O.)**

மேலே குறித்துள்ள பாடசாலையின் சங்கத் தொகுதி அலுவல்களின் ஆண்டு அறிக்கையைக் கவுன்சிலரிடம் இருந்து வரப்பெற்றோம். சங்கத் தொகுதியின் பல்வேறுபட்ட அலுவல்களை அறிக்கை தெரிவித்திருக்கிறது. அவைகளில் முக்கியமானவை பின் வருமாறு :—

1. ஆண்டு நிகழ்ச்சிக் குறிப்பின்படி சங்கத் தொகுதி பல உட்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதியும் பல வேறு அலுவல்களைப் பார்த்துக் கொள்ளுதல்

2. முதல் உதவிப் பெட்டியை வைத்திருத்தல். ஜூனியர்களினால் நன்கொடையாகப் பெற்ற பணத்திலிருந்து மருந்துகளை வாங்குதல்.

3. சங்கத் தொகுதி ஜூனியர் ரெட்கிராஸ் வார விழாவை வெற்றிகரமாகக் கொண்டாடுதல்.

4. ஜூனியர்களினாலே தயாரிக்கப்பட்ட இந்திய இனிப்புப் பண்டங்களை விற்று வந்த இலாபத்தைச் சங்கத் தொகுதி ஜில்லா பிராஞ்சிற்கு நன்கொடை கொடுத்தல்.

சங்கத் தொகுதியின் பணயிருப்புப் பட்டியலிலிருந்து, (Financial Statement) முக்கியமாகச் சங்க அங்கத்தினர்களால் நன்கொடையாக வழங்கப்பெற்ற ரூ. 52-0-0ல், மருந்துகள், டவல்கள், முகம் பார்க்கும் கண்ணாடிகள், சீப்புகள், தோட்டக் கருவிகள் முதலியவைகள் வாங்குவதற்காக ரூ. 39-7-0ஐச் செலவழித்து, ரூ. 12-9-0ஐ மிச்சப்படுத்தினது எல்லோராலும் விரும்பப்படத்தக்க செயலாகும். இந்த சஞ்சிகையில் சங்கத் தொகுதியின் வேலைகளைப் படங்களின் மூலமாய்க் காட்டப்பட்டிருக்கின்றன.

## சேலம்

**சிந்து இந்து ஆரம்பப் பாடசாலை, சேலம்**

சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் தங்கள் சுத்தத்தைக் கவனித்துக்கொள்வதுடன் நிற்காமல், பாடசாலைப் பிள்ளைகளின் சுத்தத்தையும் கவனித்துக் கொள்கின்றார்கள். காயமுற்றவர்களுக்கு முதல் உதவி செய்வதற்காக அத்தொகுதி முதல் உதவிப் பெட்டியை வைத்துக்கொண்டிருக்கிறது. அது பாடசாலையிலிருந்து ஏழு மைல் தூரத்திலுள்ள ஊர்களுக்கு உல்லாசப் பிரயாணம் செய்தது.

## தஞ்சாவூர் (கிழக்கு)

**போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை, எடமேலையூர் (Eda-Melaiyar), மன்னார்குடி தாலூக்கா**

அடுத்த ஆண்டிற்கு உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக 1955-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் முதல் தேதி திரு. S. விஜயராகவன் அவர்கள் தலைமையில் சங்கத் தொகுதி ஒரு கூட்டம் நடத்திற்று. அக்கூட்டத்தில் 135 சிறுவர்களும், சிறுமிகளும் சங்கத்

தொகுதியின் அங்கத்தினர் பெயர் அட்டவணையில் அங்கத்தினர்களாகச் சேர்க்கப்பட்டார்கள்.

உயர்தர ஆரம்பப் பாடசாலை, விஜயபுரம், திருவாரூர்.

1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 22-ஆந்தேதி பாடசாலையின் தலைமையாசிரியர் திரு R. நடராஜ சுந்தரம் அவர்களின் தலைமையில் சங்கத் தொகுதி மாதாந்திரக் கூட்டம் நடத்திற்று. அக்கூட்டத்தில் அடுத்த ஆண்டிற்கு உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். முதல் உதவியைப் புதுப்பிக்கப் பிரயத்தனம் செய்ய வேண்டும் என்று அக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

## திருநெல்வேலி

இந்து உயர்தர ஆரம்பப் பாடசாலை, வீரவநல்லூர்—திருநெல்வேலி ஜில்லா

இச்சங்கத் தொகுதி இரண்டு கூட்டங்களை நடத்திற்று. ஒன்று, 1955-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 27-ஆந்தேதி உதவித் தலைமையாசிரியர் திரு. S. சங்கர சுப்பரமணிய ஐயர் அவர்கள் தலைமையில் நடந்தது. அப்பொழுது சங்கத் தொகுதியின் கவுன்சிலர் அங்கத்தினர்களுக்குச் சொற்பொழிவு நிகழ்த்தினர். மற்றொன்று, கவுன்சிலர் திரு. S. கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் கூடிற்று. அக்கூட்டத்தில் உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## திருச்சி

குலபாந்தி பாலய்யா செகண்டரி பாடசாலை, புதுக்கோட்டை

1955-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 5-ஆம் தேதியன்று சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் இங்குள்ள தர்ம வைத்தியசாலைக்கு விஜயஞ்செய்து, ஏழை நோயாளிகளுக்குப் பழங்கள், பிஸ்கட்டுகள் முதலியவைகளைக் கொடுத்து, அவர்களுடைய விருத்தாந்தங்களை அன்புடன் விசாரித்து, சுமார் நான்கு மணி நேரம் மருத்துவசாலையில் தங்கினர்கள். அதனல் அந்நோயாளிகள் அவர்களை மிகவும் கொண்டாடினர்கள். மருத்துவசாலை அதிகாரிகள் மருத்துவசாலை முழுவதையும் அங்கத்தினர்களுக்குக் காண்பித்தார்கள்.

R. C. செயிண்டு மேரி உயர்தர ஆரம்பப் பாடசாலை, அரியலூர், திருச்சி ஜில்லா

சென்ற ஆண்டில் சங்கத் தொகுதி தன்னுடைய வேலைகளைப் பற்றிய விரிவான அறிக்கை அனுப்பிற்று. அது பின் வருமாறு:—

1. மாதாந்திரக் கூட்டங்களை ஒழுங்காக நடத்துதல்.

2. சங்கத் தொகுதி பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுப் பல்வேறு சுகாதார அலுவல்களைக் கவனித்தல்.

3. தோட்டப் பொருள்களை விற்று வந்த பணத்தை மருந்துகளுக்கும், நோயாளிகளுக்கும் செலவழித்தல்

4. அஸ்ஸாம் வெள்ள நிவாரண நிதிக்காக ரூ. 10/-நன்கொடையாக அளித்தல்.

5. சங்கத் தொகுதியின் நிதியிலிருந்து புத்தகங்களை வாங்கி, ஏழை பாடசாலை குழந்தைகளுக்குக் கொடுத்தல்.

(நிவாரண வேலை முதலியவைகளுக்கு நன்கொடைகள் கொடுக்கும்போதெல்லாம் தானே நேரடியாக **அனுப்பாமல்**, தலைமைக் காரியாலயத்தின் மூலமாகவேதான் **அனுப்ப வேண்டும்** என்று சங்கத் தொகுதிக்குக் குறிப்பு அனுப்பப்பட்டுள்ளது.)

---

தேவகோட்டை செயிண்டு மேரி உயர்தரப் பெண் பாடசாலையில் சங்கீத உபாத்தினியாகப் பணியாற்றி வரும் ஸ்ரீமதி பாலாம்பாள் அவர்களால் **செஞ்சிலுவை நிதி திரட்டு விழாவிற்காக** இயற்றப் பட்டது.

உதவுவீரே உதவுவீரே—நீங்கள்
செஞ்சிலுவை நிதிக்கு—உதவுவீரே

ஜாதிமத நிறபேத மின்றியே—மேதினியில்
சேவை புரிவது செஞ்சிலுவை.

தன்னல மின்றி தயக்கமின்றியே—தரணியில்
தயை புரிவது செஞ்சிலுவை

யுத்தத்தில் அடிபட்ட வீரர்களுக்கு—முதல்
சிகிச்சை அளிப்பது—செஞ்சிலுவை

பள்ளிக்கூடம் செல்லும்—பாலர்களுக்கு
பால்பவுடர் அளிப்பது செஞ்சிலுவை

மானிடரை மாய்க்கும்—க்ஷயரோகத்தையே
மாய்க்கப் போராடுவது செஞ்சிலுவை

ஆபத்துக்குதவும் நண்பனைப்போலவே—நமக்கு
அருந்துணை புரிவது செஞ்சிலுவை

அபாயம் வரும்போதெல்லாம்—நமக்கு
அபய மளிப்பது—செஞ்சிலுவை

செஞ்சிலுவை சங்கத்தைப் போற்றுவோமே-அதை
செழிப்பாக நாளும் வளர்த்திடுவோமே

செஞ்சிலுவை நிதிக்கு உதவுவோமே—அதன்
சேவையை எந்நாளும் பாராட்டுவோமே!"

A. Balambal
30-9-54.

## சங்கத் தொகுதிகளுடைய ஆண்டு அறிக்கைகள்

நாம் எதிர்பார்த்த அளவுக்கு நம் ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகள், தாங்கள் மேற்கொண்ட வேலைகளின் ஆண்டு அறிக்கைகளைத் தவருமல் அனுப்புவதில்லை. இந்த அறிக்கைகள் அனுப்பாததால் வெகு தொலைவிலுள்ள தொகுதிகளின் சேவையைப்பற்றி பொது மக்களுக்கோ மற்ற தொகுதிகளுக்கோ அறிவிக்க முடிவதில்லை. மேலும், மிகத் திறமையாகப் பணியாற்றி வரும் மற்ற தொகுதிகளைப்பற்றியும் நமது பாராட்டுதலை அறிவிக்க முடிவதில்லை. ஆதலால், டிசம்பர் மாத முடிவிற்குள் தங்கள் வேலைகளைப் பற்றிய ஆண்டு அறிக்கைகளை அனுப்புமாறு தொகுதிகளை வேண்டிக் கொள்ளுகின்ருேம். இதனல் அவைகளின் சேவைகளை நாம் பிரசுரிக்கும் நிலையிலிருப்பதோடல்லாமல், அவைகளை நமது நிருவாக அறிக்கையிலும் சேர்த்துக் கொள்ள ஏதுவாகும். முதலில், கனடா நன்கொடைப் பொருள்களைப் (Canadian gift articles) பெற்ற தொகுதிகள், பொதுக் கல்வி இலாகா டைரெக்டருக்கு அனுப்பின தங்கள் அறிக்கைகளின் பிரதிகளை எங்களுக்கு அனுப்ப வேண்டுமென்று முக்கியமாக வேண்டிக் கொள்ளப்படுகின்றன.

---

## சென்னையில் டாக்டர் (மிஸ்) ஹெலன் கெல்லர்



*1955*-ஆம் ஆண்டில் மார்ச்சு மாதம் உலகப்புகழ் வாய்ந்தவரும், குருடராகவும், செவிடராகவுமுள்ள சுமார் *74* வயதுள்ள டாக்டர் (மிஸ்) ஹெலன் கெல்லர் என்னும் நூலாசிரியை (Authoress) சென்னையில் முக்கிய அலுவல்களில் ஈடுபட்டிருந்தார். ரிப்பன் கட்டடத்தில் சென்னைக் கார்ப்பரேஷன் அவருக்கு சிறந்த வரவேற்பளித்து, அவரைக் கௌரவித்தது. கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களும் ராஜ் பவனத்தில் அவரை வரவேற்று விருந்து அளித்தார். செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த பூந்தமல்லியில் உள்ள அரசாங்க குருடர் பள்ளியையும் ஹெலன் கெல்லர் பார்வையிட்டார்.

---

## சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் கௌரவ டைரெக்டரின் விலாச மாற்றம்

சைதாப்பேட்டையிலுள்ள ஆசிரியர் கல்லூரி அலுவலகத்திலிருந்து, சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட்கிராஸ் கௌரவ டைரெக்டர் ஸ்ரீ T. P. சந்தான கிருஷ்ண நாயுடு அவர்கள் ரிடையர் ஆகிவிட்டதால், அவருக்கு அனுப்பப்படும் ஜூனியர் ரெட்கிராஸ் அலுவல்களைப்பற்றிய அழைப்பிதழ்களும் மற்ற நோட்டீஸுகளும் 'GITA', CHROMEPET P. O. என்னும் விலாசத்திற்கு அனுப்பப்பட வேண்டும். தொகுதிகளின் ரெஜிஸ்திரேஷன்கள், ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சில் பயிற்சி வகுப்புகள் முதலியவற்றைப் பற்றிய செய்திகளை 'ராஜ்யத் தலைமைக் காரியாலயம்', மான்டீத் ரோட், எழும்பூர், சென்னை-8 என்னும் விலாசத்திற்கு அனுப்பலாம்.



---

*List of Junior Red Cross Trained Counsellors continued—from JANUARY, 1955 issue.*

ELLURU (West Godavari Dist.)—(*contd.*)

2687 J. Devadanam, C. M. S. Elementary School, Kothur.

2688 K. Yesthara Bhaggiam, Board Elementary School, Vasanlavada.

2689 M. Krishnamurthy, Board Elementary School, Jeelakarraguden.

2690 Josyula Sitaramayya, Board Elementary School, Bhunavara.

2691 Shaik Laleeb Sahib, Board Elementary School, Dwarakan Tirumala.

2692 S. Visweswararao, Board Elementary School, Timmapuram.

2693 M. V. Gopalarao, Board Elementary School, Timmapuram.

2694 F. S. Mangamma, Board Elementary School, Vasantavada.

2695 F. B. Padmamani, Board Elementary School, Vasantavada.

2696 K. Kesavanadha Sastri, Board Elementary School, Mundoor.

2697 Gundu Veerabhadra Sastri, Board Elementary School, Chataparru.

2698 F. K. Sampoornamma, C. F. Z. M. Mission, Eluru.

2699 F. V. Grace, Eastern Street Municipal, Eluru.

2700 M. Appalacharyulu, Board Elementary School, Tadikalapudi.

2701 M. Ramachandrarao, M. V. Ratnam's School, Eluru.

2702 B. Sommiah, Board Elementary School, Chodimella.

2703 Ch. J. Sugunamma, Lakshvarapeta Boys Municipal School, Eluru.

2704 T. V. Rangayya, Board Elementary School, Sanivarapeta.

2705 Avulia Mohideen Sharif, Board Teacher, K. Pentapadu.

2706 F. B. Tulisamma, Aided Saraswathi School, Eluru.

2707 F. S. Santhamma, Board Elementary School, Chodimella.

2708 F. Marumoodi E. Prenabai, Eluru Patnaik School, Eluru.

2709 B. Nadamuni, Eluru Municipal School.

2710 F. Vemula Suryakantamma, Parasurama Higher Elementary School, Eluru.

2711 B. K. J. T. V. Ramanujacharyulu, Board Elementary School Jalipudi.

2712 G. Narasimharao, Municipal Higher Elementary School, Eluru.

MADURAI

2713 S. Sakkarai Ammal, R. School, Vadakkur.

2714 M. A. Savarimuthu, St. Alorious Higher Elementary School, Rayappanpalli.

2715 M. Nellaiappan, Board High School, Elumalai.

2716 S. Stamslams, R. C. School, Vadakkur.

2717 V. Sivaraman, Board Boys School, Periakarpurampalli.

2718 V. Annamalai, Board Boys School, T. Ramanathapuram.

2719 V. A. Sabastian, St. Alorious Higher Elementary School, Royappanpalli.

2720 M. Bommiah Naidu, Board Boys School, Navinippalli.

2721 A. Devairakkam, Board Boys School, Madakkular.

2722 S. Amirthammal, Board Girls School, K. Vellakular.

2723 P. Kannammal, Board Higher Elementary School, Tirumangalam.

2724 S. Rajamani, Board Boys School, V. Kurumbapatti.

2725 G. Muthuswamy Naidu, Board High School, Elumalai.

2726 V. Muthuirulappa Pillai, Board Boys School, K. Kottaipatti.

2727 P. Perumal, Board Boys School, Ulthiapuram.

2728 T. S. Krishna Rao, Board High School, Elumalai.

2729 P. Mookan Samuel, Board Boys School, S. Pothampatti.

2730 S. Saradha, Board Boys School, Nedungulam.

2731 R. Ganesamurthi, Board Higher Elementary School, Elumalai.

2732 S. Thiruvengidam, Board Boys School, S. Pothampatti.

2733 S. Narayanaswamy Naidu, Board Boys School, T. Vebapalli.

2734 Santham Joseph, B. M. S., Tirumangalam.
2735 R. Sriranga Naidu, Board Boys School, Athikaraipatti
2736 N. S. Pancras, Board Elementary School, Thaniamangalam.
2737 Juliet Manoharan Joseph, O. V. C. H. S., Manamadura.
2738 Margaret Davamani Dasan, O V. C. H. S., Manamadura.
2739 D. Rathnam Muthammal, B. M. S., Thenur.
2740 Joycy Indira Bai Ebenezar, O. C. P. M. H. S., Madurai.
2741 K. P. Kannusamy, G. Kalliar School, Thapathupatti.
2742 V. Arjunan Mayandi, Board Boys School, Mochikulam.
2743 R. Rathnamani, Board Boys School, Viraganur.
2744 M. S. Mohamed, B. M. B S., Kalimangalam.
2745 K. Quadir Navauzkhan, B. M. B. S., Kalimangalam.
2746 G. Rangaswamy, Laxmipuram Municipal School, Madurai.
2747 Kamalam Manickam, Board Boys School, Chatrapatti.
2748 S. Veeramalai, Board Boys School, Thaniamangalam.
2749 P. Abraham, B H E. S, Vellalore.
2750 A. J. Jeyaraj, Board Boys School, Vandiyur.
2751 Muthumani Abraham, Board Boys School, Viraganur.
2752 N. A. Kaveriammal, Board Boys School, Vandiyur.
2753 Stella Siromani Dayanidhi, West Gate Municipal School, Madurai.
2754 M. Vedamanickam, Board Boys School, Chatrapatti.
2755 M. S. Ponniah, Board Girls School, Narasingampatti.
2756 R. Srinivasan, Municipal School, Arappalayam.
2757 Annappan, Municipal School, East Perumal Maistry St., Madurai.
2758 D. Mariammal, Board Girls School, Palanganatham.
2759 Sarangapani Naidu, Board Boys School, Sholamguruni.
2760 K. Meenakshi, Sitha Rama Anjaneya Elementary School, Madurai.
2761 A. Joyce Mary, Board Boys School, Santhamangalam.
2762 S. Punuthai, Sri Kandasami Vidyalayam, Pappunaickampatti.
2763 K. P. Thayammal, Sri Kandasami Vidyalayam, Pappunaickampatti.
2764 V. Sundarammal, Board Boys School, Ammapatti.
2765 M. Perumal, Board Boys School, Ammapatti.
2766 K. Seetharaman, Board Boys School, Seelinayakanpatti.

---

Printed by K. S. S. RAJAN at the Jupiter Press, Ltd, 109-C, Mount Road, Madras-18
Published by The Indian Red Cross Society, Egmore, Madras-8.